# திருவேங்கடக்கலம்பகம்

மூலபாடம்

பொற்களந்தைப்பதி-

முத்தமிழ்க்-

## கவிவீரராகவமுதலியார்

செய்தருளியது.

---

இஃது

கையெழுத்துப்பிரதிகளில்-பாடந்தோறும் பிழைபடுகின்றதை
நோக்கி-அதைவிலக்கும்பொருட்டு-சென்னைமாநகரத்
துப் பிரபுக்களிலும்-புலவர்களிலும்-உபாத்தியா
யர்களிலும் பலரும் கேட்டுக்கொண்டதால்-
சென்னைக்கல்விச்சங்கத்துத்

தமிழ்ப்புலவர்

## திரு-வேங்கடாசல
## முதலியாரால்

பலபிரதிகளைக்கொண்டு ஆராய்ந்து-பிழைகளைத்திருத்தி-
தமது சரஸ்வதி அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

---

இது இவரது தமையனார் குமாரர்

திரு-வீரராகவசாமிமுதலியாரால்

நிறைவேறினது.

---

சாலிவாகன சகாப்தம்-௲௭௱௫௰௬-விஜய௵.




நன்ருக.

# திருவேங்கடக்கலம்பகம்.

## ஆதிகவி. கலிவிருத்தம்

விரகறிமுத்தமிழ்வீரராகவன் - - - - *
வரகவிமாலையைவழுத்துந்தோறெலாம் - *
உரகனும்வாணனுமொக்கக்கூடினல் - - *
சிரகரகம்பிதஞ்செய்யலாகுமே - - - *

## காப்பு. கட்டளைக்கலித்துறைகள்

பூப்பாதம்வேங்கடவெற்பில்வைத்தோர்புயல்போலநின்ருேன் - *
மாப்பாவைமேவும்பெருமாள்கலம்பகமாக்கவிக்குக் - - *
காப்பாகும்வேதக்கரும்பிழிசாறென்க்கன்னித்தமிழ்ப் - - *
பாப்பாடியநங்குருகாபுரீசன்பராங்குசனே - - - (௧)

குருகையர்கோன்பொய்கைபேய்பூதன்பாணன்குறையற்பிரான் *
திருமழிசைப்பெருமாள்குலசேகரன்றென்புதுவை - - - *
வருமுனிகோதைதென்கோளூர்க்கதிபதிமண்டங்குடிக் - - *
கரசிவர்தாளைப்பணிவாம்வினையையகற்றுதற்கே - - - (௨)

ஐங்கோலைவென்றுகைக்கொண்டமுக்கோலனையுடுத்த - *
செங்கோலவாடையன்கார்க்கோலமாயன்றிருச்சமயம் - - *
சங்கோலிடுங்கடன்மாயிருளாலந்தழைக்கவைத்தோன் - - *
பைங்கோலக்காவுடைப்பூதூர்முனிபுகழ்பாடுதுமே - - (௩)

மங்காதகீர்த்தியெதிராசர்பாதமணிமுடியா - - - - *
தங்காதலாற்றந்தலைசூடிக்கொண்டுதடங்கடல்சூழ் - - - *
அங்காசினியைப்புரக்குமெட்டெட்டுடனையிரண்டாம் - - *
சிங்காதனக்குருராயர்தம்பேர்சொலித்தீதறுமே - - - (௪)

பொற்பாலிற்கண்டுயில்வேங்கடவாணன்புகழரவிட் - - *
டற்பாற்கலம்பகநான்பாடவெண்ணுதலாய்முலையின் - - *
நற்பான்மணங்கமழுஞ்செவ்வாய்ப்பவளநறுங்குதலைச் - - *
சொற்பாலர்திங்களைக்கையாற்பிடிக்கத்துணிந்தெழலே - (௫)

நூல்.

## ஒருபோகுகொச்சகக்கலிப்பா.

[இது எட்டடித் தரவு - க]

மலர்மேவுதிருமகளும்வாட்டடங்கணிலமகளும் - *
அலர்மேவுகுழனீளையணங்குமிருமருங்கிருப்ப - *
வலனேருங்குபரமபதமாமணிமண்டபத்திலமர் - - *
நலனேருங்குபரம்பொருளாய்நான்குவியூகமுமானாய் - *
உபயகிரிப்புயராமனெடுங்கண்ணன்முதலான - - *
விபவவுருவமுமெடுத்துவீறுமுயிர்தோறுங்குடிகொள் *
அந்தரியாமியுமானதமையாமேயெளிதாக - - *
இந்தநெடுவேங்கடத்திலெல்லோருந்தொழநின்றோய் *

[இவை இரண்டடித் தாழிசைகள் - ௬]

நளிகடல்சூழ்சகமகட்குநாயகனீமாவலிபால் - - *
எளியவர்போன்மூவடிமண்ணிரந்தவிதமென்னேயோ * } க

நீளியவானலர்தலைமாநிலங்கவியவளர்ந்தருணின் - *
தாளிணைப்பூவுரகமலைத்தலைபூத்ததிசயமே - - * } உ

அலகில்பகிரண்டமெலாமகன்றவயிற்றடக்குமுனை - *
இலகுவடச்சிறுதளிரொன்றெந்தவிதந்தாங்கியதே - * } ௩

கந்தப்பூவயனார்க்குக்கனமறையைப்போதித்தாய்க் - *
கந்தச்சாந்தீவினிதானருங்கலைகூறத்தகுமே - - * } ௪

அனைத்துயிருமாயையெனுமரும்பாசத்தசைத்தாட்டும்
உனைக்கனிவாயாய்ச்சியெவ்வாறுரலொடுகட்டினளம்மா } ௫

மிகநம்பியான்றெருமுன்மெல்லடியிற்பிறந்தகங்கை - *
குகனம்பிவிடவதன்மேற்கொடுகடந்தாயிதுநன்றே - * } ௬

திகழ்பிறையெயிறுரசினமுதிர்பணியது - - - - - *
நகுமணிமுடியினிண்டனவிலடியினை - - - - - - * } ௧
இருண்முகில்சொரிதலினினநிரைதளருதல் - - - - *
கருதுபுவரையொருகவிகைகொண்மதுகையை - - - * } ௨
ஒளியுமிழ்மணிமுடியுரதருபதன்மகள் - - - - - *
களிகொளவலகிலகலையருள்பெருமையை - - - - * } ௩
சலசலவெனமதசலமிழிமலையிடர் - - - - - - *
தொலைவுறநொடிவரைதுணைவருகருணையை - - - - * } ௪

[இவை இரடி அராகங்கள் - ௪]

நன்மீனவுருவெடுத்தநான்றிலொருசெலுக்கிடந்த - - *
பன்மீனத்தடங்கடலைப்பலகிரியாலடைத்தனையே - - * } ௧
விண்ணகஞ்சேரண்டருணவேலையமுதருளியநீ - - - *
மண்ணகஞ்சேரண்டர்திருடனைவெண்ணெய்க்காடினையே - * } ௨
அலங்கிலைவாரிசத்தவனைச்சுதனாகப்படைத்தருணீ - - *
இலங்கிலைவேற்றசரதன்சேயெனப்பெரும்பேர்பெற்றனையே * } ௩
உம்பர்முதல்யாவருக்குமுயர்வாழ்வைப்பணித்தருணீ - *
இம்பர்தருங்காணிக்கையிச்சியாநின்றனையே - - - * } ௪
நினையொருசக்கிரியுன்காணிரைத்தபொற்பூவிலும்பாண்டம் *
வனையொருசக்கிரிசாத்துமட்பூவையுவந்தனையே - - * } ௫
கைம்மானினுரிபோர்த்தகண்ணுதலுமளக்கவொண்ணாப் - *
பெம்மானின்விளையாட்டுப்பேதையேன்சொலும்பாற்றே - * } ௬

[இவை பெயர்த்தும் இரடித் தாழிசைகள் - ௬]

கனகநகத்தூர்கமஞ்சூன்முகில்போல் *
வினதைமகத்தன்மேல்வருதன்மையை * } ௧
கருமாகடன்மேற்கலந்தசைவலத்தில் - *
திருமார்பினிற்சேர்தேங்கமழ்துளவினை * } ௨

இவை நாற்சீர் ஓரடி அம்போதரங்கம் [௨]

இருசுடரிருகைசுமந்த னை*
இணைநெடுமருதிடைசென்றனை*
அருமறைமுடியிலமர்ந்த னை*
அடியவரகமலர்நின்ற னை*

இவை முச்சீர் ஓரடி அம்போதரங்கம் [௪]

தரையிடந்த னை
திரைகடந்த னை
சகடுவென்ற னை
பகடுகொன்ற னை
அருள்சுரந்த னை
மருடுரந்த னை
அலகிகந்த னை
உலகுகந்த னை

இவை இரு சீர் ஓரடி அம்போதரங்கம் [அ]

எனவாங்கு - [இது தனிச்சொல்

பதின்மர்வழங்குமுதிர் தமிழ்மறையும் - - - - *
கோதிலாக்கிளரவிவேதமோர்நான்கும் - - - - *
வின்வுதிருச்செவியனகபுராதன - - - - - - *
இருவிபூதிக்குமொருதனிமுதல்வ - - - - - *
ஒப்பிலாதவென்னப்பநிராமய - - - - - - *
மலிபெருங்கருணையலையெறிகடைக்கண் - - - - *
அங்கணையலர்மேன்மங்கைமணாள - - - - - *
நித்தநிற்றொழுவரும்பத்தர்தாள்சேர்த்தும் - - - *
படிக்குலமாகக்கிடக்கப்பெறுகிலெம் - - - - *
எனமுனிக்கணமுமனனிணைத்துருக - - - - *
ஓங்குசீர்கெழீஇயவேங்கடநாயக - - - - - *
வேணவாவோடுநிற்காணவந்தீண்டும் - - - - *
திருக்கிளரமரர்நெருக்குறுமெல்லையில் - - - *
பொன்றிகழவிர்முடியொன்றொடொன்றுரிஞ்சலில் - *
கனகநுண்டுகளுதிர் நினதுசன்னிதியில் - - - - *
நிரலொவிலக்குனர்கரதலவேத்திர - - - - - - *
அடியுண்டொதுங்கிக்கிடப்பமெனவந்து - - - *
வணங்குபுதொழுதன் குணஞ்சிலதுதிப்பல் - - - *
மடுளரவுளத்தேசேடபூதனுமாய்ச் - - - - - *
சந்ததமிகுபாரதந்திரனுமி - - - - - - - *
உனகையிங்கரியமுகப்பால் - - - - - - - *
அனுதினஞ்செயவைத்தருண்மதியெனவே - - - (க)

[இது இருபத்திரடியால் வந்த நேரிசை ஆசிரியச்சுரிதகம்]

நேரிசைவெண்பா

வேங்கடவாசத்திருமான்மேற்பத்தியுள்ளசனர் - *
தாங்கடவாநிற்பர்பவசாகரத்தைத் - தீங்கடவா - *
சித்தமேகண்ணன்பாற்சிந்துமதித்தோனவனே - *
நித்தமேகண்ணன்பானீ - - - - - - (௨)

கட்டளைக்கலித்துறை

நீயேகத்தாவென்றறியாதுபாவியர்நிந்தைசொல்லி - - *
வாயேகத்தாநிற்பனொன்சொல்லுஞ்சேனைவர்வல்வினையாம் - - *
பேயேகத்தாமுய்யுங்கான்முண்டோகைப்பிடித்தகுறள் - - *
வேயேகத்தாய்வடவேங்கடமேவியமெய்ப்பொருளே - (௩)

கலிநிலைத்துறை

பொருளெடுத்தமுதிர்தீஞ்சொற்பூந்தமிழாற்சிறியேனிப்புவியிற்போக - *
மருளெடுத்தமாந்தர்தமைப்பாடாதுன்புகழ்பாடவரந்தந்தாள்வாய் - *
அருளெடுத்தகடைக்கண்ணுவம்புயப்பெண்ணடுத்துறையுமகன்றடார்பா *
இருளெடுத்தமலர்ச்சோலையினமடுத்தவடமலைவாழெம்பிரானே - (௪)

இரங்கல். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவண்ணவிருத்தம்

எம்பிரான்மழைமேதாயஞ்சனசைலம்வாழிந்திராதியர்விண்ணோர் - *
தம்பிரானெனையாள்கின்றிலானணிதார்தந்திலானிதுவென்னே - *
கம்புளேமணிகாலம்புளேயிளைதேர்கம்புளேகணிதுன்று - *
அம்புவேயடல்கூர்சிம்புளேநிகர்வேளம்புளேபடுமுன்னே - (௫)

இரங்கல். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்

முன்னஞ்சினவிமலைந்தாங்குமுனைவாளியிலுற்கனைகடலை - - *
இன்னம்பொருவனெனிலிங்ஙனிருந்திக்கோதைவருந்துவளோ - *
தன்னந்தனித்தானறிதுயில்கூர்சயனத்தலமாய்நயனளிக்கும் - *
வன்னந்திகழ்தண்டளிர்க்கடவுள்வடத்தான்வடவேங்கடத்தானே (௬)

புயவகுப்பு. ஆசிரியவண்ணவிருத்தம்

தானமகலாதவிமையோர்மகிழநீழவிடு - - - *
தாருவளர்சாகைநிரை - - தமையொத்திலங்கின *
தாளமுலைஞாலமகணீள்பசியதாளுடைய - - - *
தாமரையின்மேவுகொடி - - தழுவக்குழைந்தன *
சாலநவமேவிடையர்கோலமனைநாலுமுறி - - *
தாவிநவநீதமொடு - - - தயிரைக்கவர்ந்தன *
தாமமுடிராவணன்விசாலநெடுவேலைநிகர் - - *
தானையொடுமாளவடு - - சமரைத்தொடங்கின *

இது முதலடி

காளிலிகன்மான்மடியநீடுசிலைகோலிவரு - - - *
கால்படர்வபோலவொரு - கணையைத்துரந்தன*
காசடைகிலாதுகருகாதுவெளிருதிகுரு - - - *
காபுரியின்மாறர்புகல் - - கலியைப்புனைந்தன*
காமர்துளிதேவர்திருநாடரவுலாவவொரு - - *
கார்வரையினுனெடிய - - கடலைக்கடைந்தன*
காதிணையிலாடுகுழைகாதும்வெயின்மூழ்கியிருள் - *
காய்கனகவாடைபொதி - - கருவெற்பினின்றன*

இது இரண்டாம் அடி

வானமுகில்கூடியொழியாதுபொழிபோதுநிரை - *
வாடுதலுருமல்கன - - மலையைச்சுமந்தன*
வாசமதிதூரம்விடுபாளிதபராகநறு - - - - *
மான்மதபடீரமிவை - - மருவிக்கமழ்ந்தன*
வாளிரவிசோதிமதிகூடுமிருநாகமென - - - *
வாகையுடையாழிபரு - - வரிநத்தணிந்தன*
வாழ்விசயனேறிணையிலாதவொருதேரில்விசி - - *
வாசிநிரைகோல்கொடமர் - வயின்மிக்குறைந்தன*

இது மூன்றாம் அடி

தேனினமுலாவியறுகாலிடறியோலமிடு - - - *
தேமலிதுழாய்தொடையல் - செறியச்சிறந்தன*
தேகவெழிலானநதிவாயினெழுகால்களிவை - - *
சீரியவெனவுலகு - - - தினமெய்ச்சவிஞ்சின*
தேனனையநாதமெழவூதுசிறுவேயினிடை - - *
சேர்தொளைகண்மூடிவிடு - - செயலைப்புரிந்தன*
சீதமதுமாரிசொரிசோலைவளர்சாரல்வட - - - *
சேடகிரிமாயன்வர - - - சிகரப்புயங்களே*

இது நாலாவது அடி

நேரிசைவெண்பா

புயங்கமலைமேற்றொழுதபுண்ணியர்க்குமுண்டோ - *
பயங்கமலைமேவுபரமன் - - - - வியங்கமலம்*
நேருநாட்டத்தனிலமேலமருலகத் - - - - *
தாருநாட்டத்தன்சரண் - - - - - - (அ)

கட்டளைக்கலித்துறை

சரணமெனத்தன்சரணையடைந்தசனர்சனன - - *
மரணமடுத்துவருந்தாதுதன்பதம்வாழவைக்கும் - *

சிரணம்விரிக்குமதிதீண்டுஞ்சேடகிரியிலம்பொன் - *
அரணமுடுத்ததிருக்கோயின்மேவியவற்புதனே - (௯)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்

அற்புதனலர்மேன்மங்கையாருயிர்க்கணவன்சேட - - - - *
வெற்பினின்மடவாய்காமவேட்குநீவெருவலென்னே - - - *
பொற்பமர்தடங்கண்வாளிபுருவவில்லல்குற்றிண்டேர் - - - *
பற்பலகலந்தோய்கொங்கைப்பகட்டையும்படைத்தாயன்றே (௰)

கொச்சகக்கலிப்பா

அன்றுலகமுண்டுமிழ்ந்தாயகிலசெகத்காரணனீ - - - - - *
என்றுனக்கேயாளானோமிமிழருவிவடமலைவாழ் - - - - *
மன்றலகமழ்துளவோயுன்வயிற்றுளெங்களொடுகடைநாள் - - *
சென்றுறைந்துமீளவருந்தேவரையாமதியோமே - - - (௰௧)

கட்டளைக்கலித்துறை

மதியாரிகச்சுகங்காதலியாரண்டர்வாழ்வினையும் - - - - - *
நதியார்பிறதெய்வமஞ்சார்வெங்கூற்றுக்குஞ்சொன்மறைதேர் - *
விதியாராயினறதிருவுந்தியார்வடவேங்கடமாம் - - - - *
பதியாரிருதிருப்பாதாம்புயத்தைப்பணிபத்தரே - - - (௰௨)

இரங்கல். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவண்ணவிருத்தம்

பத்தர்மனப்பதுமத்திலிருப்பவர்பற்பவிழித்துணையார் - - - *
கத்துகடற்றுயிலச்சுதர்மெய்ச்சரகககிரியிற்கிளிகாள் - - - *
அத்தனைநற்றியெனைப்பிரிவுற்றவரற்புதமைக்கணினீர் - - - *
நத்துறவிப்படியித்தனைநிற்குதலசற்றுநினைக்கிலரோ - - - (௰௩)

இரங்கல். நேரிசைவெண்பா

நினைத்துருகுமேங்குமிழிநீரினுற்கொங்கை - - - - - *
நனைக்குமடலூர்த்திடவுநாடும் - - - - - கனைக்குரலனுள் *
ஆங்கடத்தானைக்கரசையன்றுபுரந்தோன்கடவுள் - - - - *
வேங்கடத்தானைக்கலவாமின் - - - - - - - - - (௰௪)

மேகவிடுதூது. கலிநிலைத்துறை

மின்கொண்டுபுனல்கொண்டுவிற்கொண்டுவருகின்றமிகுகொண்டல்காள்
தென்கொண்டல்வரவந்ததெய்வங்கரங்கொண்டசிலைகோலியென் - *
பொன்கொண்டவிருகொங்கைவரைமீதுசரமாரிபொழிமுன்னமே - *
மன்கொண்டபணிவெற்பில்வாழ்மாயர்தார்கொண்டுவம்மின்களே (௰௫)

[எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

கள்ரநெடுங்கயல்போல்வள்ளையில்வந்துவிழும் - - *
கண்கள்படைத்தமடப்பெண்கண்மயக்கமெனும் - *
வெள்ளமழுந்தெளியேனுள்ளமெழுந்தொருநின் - - *
மென்பதவேலையில்வந்தின்புறுநாளுளதோ - - *
தெள்ளுறுமறைவேரோயொள்ளியபைங்காரோ - - - *
திராயடுசாயகனேதிருமகணாயகனே - - - - *
உள்ளுகிலார்க்கிருளேநள்ளுனர்கைப்பொருளே - - *
ஓங்கியசிலையானேவேங்கடமலையானே - - - (யசு)

தாழிசை

மலைவளைத்துமதில்வளைத்தபுரமெரித்தசிவனுடன் - - *
மதுரமூறுகழைவளைத்துமலையும்வேள்வலைக்கநீள் - *
அலைவளைத்தகடல்வளைத்தவவனிகாணவுடலமே - - *
அறவளைத்தபிறையிறைக்குமனல்வளைக்கவெருவியே - *
முலைவளைத்தபொன்னுநலமைவளைத்தகண்ணிலவிழ் - *
முத்துமாதர்திரள்வளைத்துமொழியுமந்தவம்பினால் - *
தலைவளைப்புமுடையளாகியிவள்பதைத்தலறிவரோ - - *
சக்கரத்திருக்கரத்தர்சர்ப்பவெற்பிலத்தரோ - - (யஎ)

[பதின்சீர்க்கழிநெடில் ஆசிரியச் சந்தவிருத்தம்]

அத்தன்மலர்மகன்மேவுகத்தன்வடமலைவாழுமப்பனடிபணியாமலே - *
முத்திபெறன்முடியாதுகித்தமிதுபலநாலைமுற்றவறிதருநாவலீர் - *
மைத்தவனாயடுவீரவச்சிரதரனலர்வேதன்மத்தகரிமுகன்வேலின்வேள் *
சத்திபதியிவர்தாளினித்தம்விழுகினுமாறுதத்தமதுபதமீவரோ - (யஅ)

[அம்மானை. மடக்குக்கலித்தாழிசை]

பதமலராற்சகடுதைத்தபரமர்வடமலைமாயர் - - - *
அதிகுணத்திந்நிலமகண்மேலாசையுள்ளோரம்மானை - *
அதிகுணத்திந்நிலமகண்மேலாசையுள்ளோராமாகில் - *
மதிநுதலினவளைவிடமாட்டாரோவம்மானை - - - *
மாட்டார்மாதரைவிடத்தான்மாலானாரம்மானை - (யகூ)

[தவம். நேரிசைவெண்பா]

மானிடர்காள்கானிலுடல்வாடப்பெருந்தவஞ்செய் - - *
தேனிடருற்றீர்பணிவெற்பெம்பெருமான் - - தானே *
தவமதுவேவீசுதுழாய்த்தாமனடியுள்ளில் - - - - *
தவமதுவேயாவருக்குந்தான் - - - - - - (உய)

[இதுவும் அது. கட்டளைக்கலித்துறை]
யாவருக்கிந்தப்பெருமையுண்டோதுகவின்னுயிர்காள் - *
மாவருக்கைத்திரள்பொற்சுடர்தூங்கும்வடமலைவாழ் - *
தேவருக்காட்பட்டுவைகுந்தமேவித்தினமிருப்போர் - *
பூவருக்கம்பொருதாட்கேற்பபடுமெய்ப்புவனமுமே - (உக)

[எழுசீர்க்கழிநெடில் ஆசிரியச்சந்தவிருத்தம்]
புவனமுழுதும்பணியுமிருசரணபுண்டரிகர்பொறியளிகள்கிண்டுதுளவார்
அவனிமகள்செங்கமலமகள்கணவர்தங்குகிரியழகுதிகழுங்குழையில்வீழ்
குவளைவிழியின்குறவர்மடமகளிர்செங்கைவிரல்கொளுவியகவண்கல்பட
நவமணம்வழங்குசுரதருமலருதிர்ந்துவிழுநலமலிபுயங்ககிரியே] [வே

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியச் சந்தவிருத்தம்]
கிரிச்சிலையரன்பலியொழித்தவனெடுந்துயர்கெடுத்தவனடுஞ்சிலையே - *
தரித்தவனிருங்கடல்கொதித்திடமுனம்பொருசரத்தவனுறைந்தருளூர் - *
மருக்கமழ்தடம்பொழிலுதிர்த்திடுபழம்பொழிமதுத்திரடினந்தினமே *
தெருத்தொறுநடந்தகல்வயற்றலைபுகுந்திடுதிருப்பதிவளம்பதியே (உங)

[எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்] [யாய்
பதின்மர்செந்தமிழைப்படிக்கிலாய்கேளாய்படித்தபேர்தாளையும்பணி-
எதிபதிசரணேசரணமென்றொருகாலிசைக்கிலாயெமதுவேங்கடத்தைத்*
துதிசெயாயிருந்தவிடத்திருந்தேனுந்தொழுகிலாய்வாழியென்மனனே*
மதிநுதலலர்மேன்மங்கைநாயகனூர்மலர்ப்பதங்கிடைப்பதெவ்விதமே*

இரங்கல். தாழிசை (உச)
மேகந்தவழ்காவேவளர்நாகங்கமழ்பூவே - - - - *
வேலைக்கெழுதிரையேயறல்சாலத்திகழ்கரையே - - *
ஏகும்படவினமேகழிபோகுங்களியனமே - - - *
இரைமைச்சிறுகயலேயெனதுரைமிக்கதுமயலே - - *
ஆகந்துரவணிவார்தினமாகம்புவிபணிவார் - - - *
அணிபொற்றுகிலுடையாருயர்பணிவெற்பிணையுடையார்-*
மாகந்தரவுருவார்வருமோகங்கெடமருவார் - - - *
மண்முந்தரியாதேயவர்சினமுந்தெரியாதே - (உரு)

[இதுவும் அது. கொச்சகக்கலிப்பா]
தெரியாமன்மதுவருந்துஞ்சிறையளியைத்தூதுவிட்டேன் *
தரியாழிவேங்கடமாறனக்கென்மால்சாற்றுமல் - * *
கரியானங்கவன்கரங்கால்கண்கனிவாய்கமலமெனப் - *
பரியாநின்றவைக்கெதிரோபறந்தெனையுமறந்ததுவே - (உசு)

மறம். தாழிசை

மறவர்கொம்பைவினவவந்தவிறைவதூதகேளடா - - *
வடமலைக்குணின்றமாயர்தடமலர்க்கணருளினல் - *
விறல்பொருந்துமெங்கள்கொம்புவீறுமுங்களாணையின் - *
வெண்மைபெற்றகொம்புபோலவிற்பதோவனைந்திடும் *
திறனடைந்தகொம்புபோலவிதியினெவ்வினைத்தையும் - *
சேருமோசுவர்க்கலோகதாருவிட்டகொம்புபோல் - *
அறமிருந்தசுரர்தொடப்பொறுக்குமோசொலரசர்பால் - *
ஆனகொம்புதண்டிகைக்கமைந்தகொம்புசரதமே - (௨௭)

நேரிசைவெண்பா

சரதங்கதிபெறலாந்தாலத்துயிர்காள் - - - *
நிரதமவனைநினையீர் - - - அருமறையும் *
செப்பரியவெண்ணத்தான்சேடகிரியான்கரத்தில் - *
அப்பரியவெண்ணத்தானல் - - - - (௨௮)

கட்டளைக்கலித்துறை

ஆலத்தரங்கத்தைவாய்ப்பொதிப்பாம்பினிலக்கயிலை - *
போலத்தரங்கத்தைவீசாழியிற்றுயில்புங்கவர்பைங் - *
கோலத்தரங்கத்தைநன்மகற்கேபண்டுகூறுமுத்தி - - *
நூலத்தரங்கத்தையேந்தவென்வேங்கடநோற்றதுவே (௨௯)

கலிவிருத்தம்

நோற்றவர்மேலருணோக்கம்வைக்குமால் - *
வீற்றிருந்தருள்பணிவெற்பின்மாதரீர் - - *
தோற்றிருகுழைவலிசொலப்படாதுகட் - *
கூற்றடுந்தொறுநிலைகுலைந்தவல்லவே - (௩௰)

[மதங்கி. பதினன்குசீர்க்கழிநெடில் ஆசிரியமடக்குவிருத்தம்]

அல்வளைசோலைப்பணிச்சிலம்படிகளடியர்நம்பணிச்சிலம்படிகள் - *
அனுதினம்பாடித்துதிக்குமாதங்கியனமணிப்பூணின்மாதங்கி - *
எல்வளைக்கரத்தாற்பற்றுவதுறைவாளிவட்குநேர்குலிசிபாலுறைவாள் - *
இயமியம்புவதுதக்கதொத்தோதியிருளெனத்தக்கதொத்தோதி - *
வில்வளைவழிக்குமிருகரும்புருவமேனியோவொருகரும்புருவம் - *
வேட்கையாற்பாடுஞ்சுரஞ்சரிகாமாவிழிக்கொருவிதஞ்சரிகாமா - *
நல்வளைகெழுவெண்டரளமேயாம்பனலமலிசெவ்விதழாம்பல் - *
நகுகபோலங்கள்வலயதர்ப்பணமேநடிப்பதுமிலயதர்ப்பணமே - *
(௩௧)

[இரங்கல். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

பணம்பரப்புநாகணையினுலகெலாம்பரவுவேங்கடத்தான்பூ - - *
அணங்கினைப்பிரியாதமாலவேதனையருளினனென்பாரால் - - *
வணங்குவிற்பொருவாணுதற்பவளவாய்மாதரீரம்மாலைத் - - - *
தணந்தவிக்கொடிமனத்தெழுமாலும்வேதனையளித்ததுதானே - (௫௨)

[நாணாவிடுதூது. கொச்சகக்கலிப்பா]

தானேதனக்கிணையாந்தண்வேங்கடவனுடன் - *
கோனேரிவாழுங்குருகினங்காள்கூறுமினோ - *
மீனேயெழுதுகொடிவேளெடுத்தவாள்போல - *
வானேயெழுமதியென்மாமதியுண்டோடுகையே (௫௩)

[எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

கைத்திகிரியானுமத்திகிரியானும் - - - - - *
கார்வண்ணத்தானுமோர்வண்ணத்தானும் - - *
அத்தியணையானுந்துத்தியணையானும் - - - - *
அருந்தண்டத்தானும்பருந்தண்டத்தானும் - - *
சித்தமருவானும்பத்தமருவானும் - - - - *
சிறக்குமன்புளானும்பறக்குமன்புளானும் - - *
மத்துவரையானுமத்துவரையானும் - - - - *
மாகமலையானுநாகமலையானே - - - - (௫௪)

[இரங்கல். பன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

மலையக்குவடுதனைமுலையாமலையிற்பழித்தாளெனப்பகைத்து - - *
மதன்றேராக்கியனுப்பவருமந்தானிலமக்கிரிப்புலிபால் - - *
கொலைகற்றெழுந்திங்கிவளுடலிற்குடிகொளுயிர்ப்புதனைக்கூட்டிக் - *
கொள்ளச்சுடரைப்பரப்புசெம்பொற்கோலச்சிறுசாளரவாசற் - *
றலையிற்கதவுதிறந்துந்தன்மைகுறித்துன்திருவணையைச் - - *
சாலத்துதிக்கின்றனளிவளைத்தழுவாவிதமெண்ணிதுமொழிமோ - *
சிலையைச்சிலைவாணுதலாக்கச்சிறியதுகளைவிடுகடவுட் - - - - *
செந்தாமரைத்தாட்பெருமாளேசேடகிரிவாழ்பெருமாளே - (௫௫)

[இரங்கல். கட்டளைக்கலித்துறை]

மாளவிராகமளிபாடியாடுமுன்வாசத்துழாய்த் - - - *
தோளவிராகத்திலென்கொம்பனுண்முலைதோய்வதென்றோ *
நீளவிராகமணிப்பாம்பணைதுயினித்தமலர்த் - - - *
தாளவிராகவநந்திருவேங்கடந்தங்கத்தனே - - - (௫௬)

[நேரிசைவெண்பா]

தங்கநாகத்தானத்தானத்தனன்மயமா - - *
தங்கநாகத்தானத்தானத்தன் - - - துங்க
வடமலையானந்தமிறைவன்சிலையான்சேக்கை - *
வடமலையானந்தமிறைவன் - - - - (௩௭)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

இறைவனிவனெனவறியாதிதரதேவர் - - *
இணையடியைப்பணிந்துதிரியேழையீர்நான் - *
அறைவனிதுதிடமாதிமூலமேயென் - - *
றஞ்சிறுகண்மதயானையழைத்தபோதஞ் - *
சிறைவனசத்திருமுகப்புள்ளூர்ந்துவந்து - *
செகமறியும்படியளித்ததேவதேவன் - - *
நறைவனவஞ்சனகிரிமாலல்லனோகாண் - - *
நாடியவற்றொழுதுகதிநண்ணுவீரோ - (௩௮)

[இரங்கல். கட்டளைக்கலிப்பா]

வீரமேவுஞ்சுடர்நேமியெம்பிரான்மேவும்வேங்கடவெற்பினிற்காடுகாள்
சூரமேவவருநெட்டுயிர்ப்பையுங்கோலமேவுகுலவண்டுவீழ்கையும் - *
ஆரமேவியகண்களும்பெற்றுவாரம்மூலைக்கொடியாரலர்தூற்றவே - *
வாரமேவிநிற்கின்றீரொன்போலவேவாஞ்சித்தீர்கொன்மணவாளர்தம்மை

[எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்] [யே

மையார்தருகண்ணொடுவாரமைவின்மணிசந்தனமாவனமும்பெறலால் *
ஐயாவிவள்வன்மூலையுன்மலைநேராய்நின்றதுநீயணையத்தகுமால் - *
நெய்யாரளகச்செய்யாள்கணவாநிறைவெண்மதிகாய்நிலவீன்பணிலக் *
கையாயருளைச்சொரிசெங்கமலக்கண்ணாதிருவேங்கடமாயவனே (௪௰)

[சம்பிரதம். பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்]

மாயமலநெடியகருவேலையொருகைக்கொள்வுன்வளைவிரற்றலைநிறுவுவன் - *
வன்னிநடுநிற்பனம்புலிபுவிவரப்புரிவன்மாவினதுகொம்பினுடனு - *
காயமிகநாறலரிதன்னிலேயோடுதடிகாட்டுவனொருநொடியினிற் - *
கனலோகமுழுவதுமுடைப்புனண்டமுமுண்டுகக்குவன்னிவைவித்தையோ
வேயனையதோளினயிராணிகலைவாணிபனிவெற்பில்வருகலியாணியும் - *
மென்பாணிவனசநிகர்செம்பாணிதொழுதுசொரிவிரிமலர்படக்கன்றுதாட்
சாயன்மடவன்னநடைநங்கையலர்மேன்மங்கைதன்கணவர்வடமலையில்வாழ்
சக்கிரமாலடிதலையில்வைத்திடாவொருகடவுடன்னையினிமுன்விடுவனே(௪௧)

[எழுசீர்க்கழிநெடில் ஆசிரியச்சந்தவிருத்தம்]

விடுத்திடுபடைக்கலவரக்கர்மடியப்பொருவிறற்சிலைவளைத்தடுபிரான் - *
வடிக்கணைவிழித்திருவிருக்குமகலத்தினன் மணிப்புணிவரைக்கண்மடவீர்
கொடிக்கிணையெனச்சொலுமதுத்தமருசுப்பொழில்குதித்தறவும்வெட்கி
[யலவோ
இடிப்புயலகத்தெழுதடித்திலகுமப்புயலிடத்தினிலொளித்துவிடலே
[இரங்கல். எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்] (௪௨)

ஒளிக்குங்குமகொங்கையுகளத்தின்மடவீர் - - *
உத்துங்கசிகரத்திருசேடகிரிமால் - - - *
அளிக்கும்பெருங்காமமுள்ளத்தினுள்ளே - - *
அடங்காதுசொல்லோவிடங்காலும்விழியாள் - *
கிளிக்குங்குயிற்குஞ்சிகிக்குஞ்சகிக்கும் - - - *
கீதத்தளிக்குங்கபோதத்திரட்கும் - - - *
களிக்கின்றபூவைக்குமன்னங்களுக்கும் - - - *
காருக்குமேசொல்லுமூபொன்சொலாதே - (௪௩)

கைக்கிளை. மருட்பா

தேங்கோதைவாடமிருசீறடிகள்பார்கூடும் - - *
பூங்காவிக்கண்ணிமைத்துப்போராடும் - இங்கிவையால்
ஒப்பிலாவேங்கடத்துறையிவர் - - - - - *
அப்பனுண்டுமிழ்ந்தவலர்பூக்கொடியே - - (௪௪)

[எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

கொடியொன்றிரண்டுசிலைமன்றல்கொண்டகுமிழொன்றிரண்டுநலகூர் *
வடியொன்றிரண்டுகுழைநின்றிலங்குவளையொன்றிரண்டுதிரள்வேய் - *
தொடியொன்றிரண்டுவனசஞ்சுமந்துதுளவன்புயங்கசிரிவாய்ப் - *
படியொன்றிரண்டுதளிர்கன்றவின்றுபடர்கின்றதின்பமுறவே - (௪௫)

வண்டு. கட்டளைக்கலித்துறை

உறவேதுமக்குவண்டீர்வேங்கடேசர்பண்டுதேியநல் - - *
நிறவேயனையசொன்மானிடைபோம்படிநித்தமுலை - *
அறவேபருத்தனநீரோகுழலிலமர்ந்துமலர் - - - *
நறவேயுண்டாடுகின்றீர்நடப்போம்விண்டுநண்ணுவிரோ (௪௬)

நேரிசைவெண்பா

நண்ணாரிலங்கையடுநாயகனேவேங்கடக்கார் - *
வண்ணாவுன்காற்றூமனாயிற்பாய் - கண்ணாசை

உட்டிருப்பமாட்டாதுநிற்கின்றாளன்னையிவள் - *
விட்டிருப்பதெந்தவிதம் - - - - (௪௭)

[குறம். எண்சீர்க்கழிநெடில் ஆசிரியச் சந்தவிருத்தம்]

எந்தவிதங்களுமறிகுறமகளுனிங்கெதிர்வந்தினியெனதிதமொழிகேள் *
அந்தமுறந்தனினவமணிகொடுவாவன்பிலணிந்திடவழகியகலைதா - *
கந்தமிகுந்ததனந்தனில்குறியேகண்டனனின்றலர்கமழ்குழன்மடவாய் *
வந்தெவருந்தொழவடமலைதனில்வாழ்வண்டுளவன்றினமருவுவனுனையே

[எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்] (௪௮)

உனைக்கருதாமனமுமுனைத்துதியாவாக்கும் - - *
உனைவணங்காத்தனுவையுங்கொண்டுலகிற்பாவம் - *
அனைத்தினையுமீட்டினனின்றொழிக்கப்பூமேல் - *
அயனாலுமமையாதாலந்தப்பாவம் - - - *
எனைத்தொடராவிதம்பாலித்தருள்வோனீயே - *
எனத்துணிந்துன்சரணடைந்தேனெனையாள்கஞ்ச *
மனைக்குளுறைகொடியலர்மேன்மங்கைநாதா - *
வடமலையாயருள்பெருகிவழிகண்ணானே - (௪௯)

[எண்சீர்க்கழிநெடில் ஆசிரிய மடக்குச் சந்தவிருத்தம்]

கண்ணன்வேங்கடக்கண்ணன்வண்ணமேகரியவன்சொலற்கரியவன்திருப்
பெண்ணனெங்களன்பெண்ணனந்தன்வாழ்பெருமைநாட்டகப்பெரு
[மைநாட்டமான்
மண்ணிழைத்தனமண்ணிழைத்திடாமாசிலம்புதாண்மாசிலம்புயம் - *
பண்ணின்மாவுணப்பண்ணின்மாகுழற்பாவையுண்மையேபாவையுண்

[பதினான்குசீர்க் கழிநெடில் ஆசிரியவிருத்தம்] [மையே

மையவாங்கோலவிழிமழைபொழியவளர்தனச்சையமேற்பரவி - *
மணங்கமழ்நறுங்குங்குமஞ்செழுஞ்சாந்தமான்மதங்கலந்துகொண்
டொழுகும்
துய்யநீராறங்கிருமருங்கோடச்சுழிக்குமவ்வாற்றிடைக்கிடந்து - *
துலங்குசீரங்கம்படைத்தொருதுடியிற்சுருங்கிடைமடந்தைமாலாகி *
ஐயகேளுனைநேரொத்தனள்கரத்திலாழிசங்கணிந்திடாக்குறையொன் *
றக்குறையகற்றியணைந்திடத்தகுங்காணங்கண்வானரசுவாநோக்கி - *
வெய்யவாய்த்தறுகட்கடும்புலிப்போத்துவெருண்டெழுந்தடிக்கவாலடி
வேங்கடாசலத்திலோங்குமாதவனேவினையிருள்சீக்குமாதவனே [க்கும்

[எண்சீர்க் கழிநெடில் ஆசிரியச் சந்தவிருத்தம்] (௫௧)

ஆதவன்கதிர்சுடப்பாதவந்தீசுரத் - - - - *

தழல்பொருதண்டநன்னிழல்பெறுநிடருறும் - *
சீதமென்குமுதவாய்மாதினிகாண்பைநீ - - *
சீர்த்தியாழ்வார்பெருந்தீர்த்தமுந்தூவியும் - *
மாதர்தண்டுணர்கொயுந்தாதலர்ச்சோலையும் - - *
மஞ்சுலாவுங்குவட்டஞ்சனாசலமுமப் - - - *
பூதரந்தனில்வருஞ்சீதரன்கோயிலும் - - - - *
பொருவில்சூளிகையுமாதெருவுமாளிகையுமே (௫௨)

கட்டளைக்கலித்துறை

மாளிகைசுற்றமுடன்பிறந்தார்பெண்டிர்மக்கள்பொருள் - *
சாளிகைபொற்கலன்பட்டாடைவாகனந்தையனல்லார் - *
கேளிகையாதிற்கும்வேம்பெனச்சேடகிரித்தனிவில் - *
லாளிகைநேமியன்றாள்கரும்பாமுத்தியாசையர்க்கே - (௫௩)

நேரிசைவெண்பா

கேசவனார்சேடகிரிமாயர்கைந்துமுகத் - *
தீசனதிபத்தனிதுசரதம் - - - நேசமிகச்
சங்கங்கையேந்துமவர்தாட்புனலென்றேதினமும்
அங்கங்கைசென்னிவைத்தானால் - - (௫௪)

[கார். காலம். எண்சீர்க்கழிநெடில் ஆசிரியமடக்குவிருத்தம்]

ஆலுமளியங்கண்வனமலர்முலைபாய்காலம் - - - - *
அவர்பிரிவாலங்கண்வனமலர்முலைபாய்காலம் - - *
கோலமயிலின்பரிவிற்குனித்துவருங்காலம் - - - *
கொடியேன்முன்மதன்பரிவிற்குனித்துவருங்காலம் - *
நீலமணிவண்ணனம்பொனிழனாகவனையின் - - - - *
நெடுமாயன்மலர்ச்சோலைநிழனாகவனையின் - - - *
சாலுமழைக்குலம்பலகாற்றடித்துவிடுங்காலம் - - - *
தழற்கொழுந்தாமெனப்பலகாற்றடித்துவிடுங்காலம் (௫௫)

[எண்சீர்க் கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

காலஞ்சென்றதெழுங்கனநரைதிரைமேவிக் - - - *
காயநெகிழ்ந்ததிணைக்கண்களிருண்டதடஞ் - - - *
சூலங்கொண்டுபொருந்தோணமனாள்வருமுன் - - *
துணையாவினிமனமேநினையாயனுதினமே - - - *
மாலம்பங்கயநாண்மலரிலணங்கலர்மேன் - - - - *
மங்கைதன்மணவாளன்வண்டுளவணிதோளன் - - *
ஆலந்தண்டளிர்மேலறிதுயில்கூர்பெருமாள் - - - *
அஞ்சனவெற்பமலன்கஞ்சமலர்ப்பதமே - - (௫௬)

[மடக்குக் கட்டளை மண்டலக் கலிப்பா]

பதத்தளந்த திருப்புவனத்தையே பண்டடைத்த திருப்புவனத்தையே - *
வதைத்த தேற்றிடுமாத் தானவரையே மழைக்கெடுத்த துமாத் தானவரையே *
இதத்த பூப்பெண் மணக்குமந்தாரமே யிக்குநாட்டு மணக்குமந்தாரமே - *
திதித்த தீங்கறிவேங்கடநாகமே செங்கண்மாலிடம் வேங்கடநாகமே - (௩௭)

[௩௮ - அடி நேரிசை ஆசிரியப்பா]

நாகக்குலத்திறைகாய்கதிர்மணிச்சூட்
டாயிரந்தலைக்கொளுமாயிருஞால
மகள்சிரமச்சிரந்திகழ்சுடர்க்கற்றை
வனைந்தவம்மௌலியினனந்தலைநாயக
மரகதமணியெனத்தரையினிலைஇய
ஓங்குபொற்குடுமிவேங்கடக்கனகத்
தூவியிறைப்பண்மேவியமாயோய்
நலமணிமலைபானிலவுபோர்த்தென்ன
வாலிதிற்கருப்புரமேலணிந்தந்த
வியன்மலைகமஞ்சூற்புயல்படிந்தாங்குப்
புழுகொழுகப்புனையழகியவடிவோய்
செங்கட்பகவவெங்கட்கிறைவ
ஒருதனியாழிப்பரிதிவிட்டகலா
விரிகதிரொனநிற்பிரிகிலாதிருக்கும் [மு
மடந்தைநண்மருங்குனுடங்கப்பணைத்தெ
கொங்கையினலர்மேன்மங்கைதன்கணவ
நிற்பணியடியார்பொற்பதத்துகட்கும்
நிகரவென்குற்றமிகவுளசிறியேன்
நான்மொழிபுன்சொலுங்கேண்மதியத்தை
முடிவிலாவொருநின்னுடைமையாய்நிற்கும்
இருவகைச்சத்தினிருமலநித்திய
வித்தையுமாகியசுத்தசத்தொன்றை
நித்தருமுத்தருமைத்தகட்குவளைத்
தேவியர்நீயுமேவிவீற்றிருக்கப்
பேரிடமாக்கினையோருமற்றதற்கு
வேறுபாடுடைத்தாக்கூறுமிச்சிரசத்
தொன்றினையாலம்வித்தொன்றமுளைத்துக்
குளூஉத்தழைகொம்பாப்பரூஉச்செழுமர
பரிணமித்தென்னவரிசையினேழா [மாப்
விரியப்படுத்திவரன்முறைதோன்றிய
அஞ்சினுமனையைப்பஞ்சீகரணம்
பண்ணியிலஞ்சியுளண்ணலங்கமல
உருப்பொலன்றுதாற்றிரட்டுபுநடுவணில்
சீரியபொகுட்டுமேருவிற்றிசைமுகன்
உடைமகற்சேர்த்திப்படையெனவிதித்தாங்
கிலகுமவற்கொண்டுலகுமவற்றுட்
சாற்றொருநால்வகைத்தோற்றத்தோரேழ்
பான்மைப்பிறப்பினுன்மத்திரளையும்
வருவித்தவற்றையுரியதானத்தில்
இறைகொளவைப்பித்துறைதருமவைதாம்
மிகப்புரிகருமமகத்தினும்புறத்தினும்
மரீஇயுணர்ந்துட்பரீஇயவனந்தம்

உயிர்கட்கின்பமுஞ்செயிராவந்தம்
ஆருயிர்தமக்குக்கூர்தருதுன்பமும்
ஊட்டித்திருவிளையாட்டயர்கின்றனை
அடுக்குறின்மாயையைக்கடக்கவல்லவரார்
அவ்வுயிர்க்குழாத்தறவெவ்வியதமியெனும்
நின்னருள்பெருமேயிந்நிலந்தன்னில்
கண்ணுளரொருவனெண்ணிலாவேடம்
எடுத்துப்பலவிதநடித்திடல்பொருவ
இனைத்தெனக்கூத்துநினைத்தரக்கொண்ணு
உருவமெடுத்தும்பருவம்வந்துழி
விடுத்தும்பெருநரகடுத்திடருழந்தும்
நலங்கறங்கென்னவலமந்தின்னணம்
சாலவுமெய்த்தனென்போலுமிப்பிறவிப்
பௌவப்பரப்பையெவ்விதங்கடப்பல்
அனுதினமவிச்சையெனத்துணர்வழித்தலை
ஒழியாததனுவெழுமகங்காரம்
யானெனதெனும்பற்றுறுதியற்றுதல்
விடாததனுனேகெடாதுறுமவாவும்
எனக்கிதுவேண்டுமெனக்கருதுந்திறன்
உதவுதறவிராததனுனுதித்துப்
பெருகியவிழைவுபொருள்களையிறுகப்
பிடிக்கப்புரிதல்விடுத்திடாததனுன்
மறுதலைகடந்துகதுமெனமூளக்கும்
வெறுப்புத்தீத்தொழின்மறுப்படுமாற்றமும்
வருவகையிழைத்தலொருவாதிவற்றுன்
விளையிருவினையும்வளர்விதமகலா
ஆயிருவினையான்மாயத்தனுவும்
தோற்றியதனுவான்மாற்றருவினையும்
விளையாத்தருவுந்தருவால்விளையும்
வருவனபோலவராதிராவொருதலை
நோக்கியவற்றைநீக்கலென்வயமோ
எத்தவறிழைக்கினுங்கதுகிண்கிணிக்கால்
மழலையங்கனிவாய்க்குழவியையீன்ற
தாயளிப்பதுபோனீயளித்தருள
உள்ளங்கருதியென்கள்ளமனத்தைத்
திருத்திமற்றுன்பாலருத்தியுண்டாக்கிப்
பற்றலர்ப்பொருமுன்வெற்றிக்கொடியெனும்
புயமொடுசாலிவயல்சுற்றுடுத்த
பூதூர்தனில்வருமாதவத்தெதிபதி
தனதாணையின்வழிநனிமிகவொழுகும்
வரவைணவத்தில்விரகிலாவெனையும்
கூட்டிநற்குரவர்தாட்டுணைபணிந்தவர்
தம்மாலயத்துமும்மையாகாரமும்
படைத்தலர்வகுளத்தொடைப்புயமாறர்
சொற்றசெந்தமிழ்மறைகற்றுணர்ந்தழகிய
உன்னலந்தெரிந்துகொண்டென்னையிகழ்ந்து
சிலகைங்கரியநலனுறப்பண்ணும்
படிசெய்துறுபலனடையநீகைக்கொண்
டெனக்குபாயமுமாயெனக்குபேயமுமாய்
இருந்தொன்றும்வருந்தாவிதமெனை
ஆட்கொளவேண்டுமாட்கொண்டனையேல்
சனனமுமரணமும்வினைகளுநீங்கக்
கரைபொருவிரசையுங்கடந்து
பரமாமுனதுபதத்தடைகுவனே - (௫௮)

கட்டளைநிலைக்கலிப்பா

அடையமுண்டகமேலோன்பதத்தினுக்கப்புறத்திலருந் தூரமாழியம் - *
படையன்வாழ்பதமென் றுரைப்பீரவன்பத்தருக்கப்பதநெடுந் தூரமோ
தடையிலாதிபங்கூப்பிடுகாலையத்தலைவன்வந்தமைதானறியீர்கொலோ *
கொடையிலோங்கியவேங்கடமாயவன்குடிகொள்வைகுந்தங்கூப்பிடுதூ
[பாண். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்] [ரமே

தூரச்சுரங்கள்பலசேர்க்குந் துணைநீயறிவாயெனவிருந்தேன்
வீரத்திருவேங்கடத்தானைவேற்றுமடவாரொடுசேர்த்தாய் *
ஈரக்கடல்சூழுலகினுனக்கிணையார்பாண்விமிழிசைக்கோல் *
ஆரப்பெருஞ்சீர்வினைவிடுத்தகன்றிவ்வினையடுத்தாயே (சூய)

தழை. கட்டளைக்கலித்துறை

அடுத்தாளைவாழ்விக்குமால்வடவேங்கடமன்னமன்ன - - - *
கொடுத்தாய்நறுந்தழையான்கொண்டுபோந்துகொடுத்தவுடன் - *
எடுத்தாள்விழியொற்றிக்கொண்டாள்கைப்போதினைடீர்ந்தழைமேல் *
படுத்தாணிற்கும்பொழுதோர்கொம்புபோன்றனள்பான்மொழியே(சூக

[எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

மொழியமுதிதழ்தீங்கனிமுலையிளநீர்முகமதியாக்குஞ்சகமதியயனுன் - *
விழிவிடமனங்கல்லாகவேவிதித்தான்விருத்தமாவுலகைவருத்தவேயலவோ
வழிவழியடிமையெமைக்கொளுமலர்மேன்மங்கைதன்கணவன்செங்க -
[ணெம்பெருமான்
தெழிபுனலருவிமழையெனமுழங்குத்திருமலைமீதேவருமடமாதே (சூஉ)

நேரிசைவெண்பா

மாதவத்தோர்சிந்தையுமாமாமறையினுச்சியுமார்ம் - *
கோதகற்றுவேங்கடப்பொற்குன்றமுமாம் - சீதமலர்
எட்டக்கரத்தானிடந்திகழ்சங்கோன்குருந்தை - *
எட்டக்கரத்தானிடம் - - - - - - (சூங)

கலிநிலைத்துறை

இடங்கொண்டுவடமலைவாழ்பெருமானைவளர்த்தகுலத்தேந்திழாய்மோர்க்
கடங்கொண்டுதிரியிடைச்சியல்லைநீசிற்றிடைச்சிகண்டாய்சும்மாக் - *
குடங்கொண்டுதிரிவையிப்பால்வாராயங்கன்றினைக்கைகொடுக்கட்டாயால் *
திடங்கொண்டுதிரியாமன்மயங்குறுமென்பசுவருத்தஞ்சிந்தியாயே - (சூச)

[எண்சீர்க் கழிநெடில் ஆசிரியச் சந்தவிருத்தம்]

சிந்திப்பனவுந்துதிசெய்வனவுந்தெரிசிப்பனவுந்துரிசற்றிடவே - - *
வந்திப்பனவும்பூசிப்பனவும்வாஞ்சிப்பனவும்யாஞ்செப்புவமால் - *

தந்திக்கிமையோர்பந்திக்களையின்றூழிக்கருள்கூராழிக்கடவுள் - *
கந்தித்தெழுபூவுந்தித்திருவேங்கடமால்சரணத்தடமாமலரோ - (௬௫)

வேற்றொலி வெண்டுறை

மாமலயத்தென்றல்தேர்வருமாரன்கணையாகிவந்துநான்கு - - *
பூமலர்ந்தென்னிறையொடுநாண்முத்திதுயில்கொண்டனவப்போர்வே -
தேமலனாயின்னம்விடாத்திறத்தாலிவ்வுடலினுயிர் [ணிலத்
தாமதித்துநின்றதுபூந்தழைசிறையமடநாராய் - - - - - *
கோமுனைவேற்றுருபதன்றன்கொடிமானங்காத்தபிரான் - - *
வேமணிகளுதிர்சாரல்வேங்கடத்துமாயனுடன் - - - - - *
நீமொழிந்துவாராயென்னிலையெல்லாந்தெரிந்துகொண்டே - (௬௬)

[குறளடிவஞ்சிப்பா]

கொண்டற்றிரள்குழனிரையொடும்
வண்டளவினமணிநகையொடும்
கமழ்தோன்றிகள்கைத்துணையொடும்
இமிழ்வண்டினமிணைநோக்கொடும்
தழைசிறைமயிலசாயலினொடும்
எழுகோபநல்லிலவிதழொடும்
இகல்பான்மையினிவையாவையும்
மகிழ்வாயிவண்மால்வேதனை
காணியநனிகணங்கொண்டன
தானுவைம்படுசரமாரனும்
எதிர்வந்தனனெய்வானினி
வெதிரைப்பொருமென்றோட்கொடி
படுவெம்படர்பார்க்கிலமெனச்
சுடுவெங்கதிர்சொரிஞாயிறும்
நகையெழுமுகநாண்மதியொடு
புகையாகியபனிமதியமும்
வருவானகமறைவுற்றன்
வெருவாமணிவிடவரவமும்
வன்னச்சுடர்மணிகான்றிடக்
கன்னிப்பிடிகடமாவினைத்
தழுவுறவடுதாள்வள்ளுகிர்
உழுவைக்கணமுழையிற்புக
ஒழியாதெழுமுருமதிர்தரு
மழைநாளிதுமடவஞ்சியர்
நாதற்பிரிநாளரன்றுயர்
காதற்புரிகலையைப்பிரி
பிணைபோன்றனள்பெருமதர்விழி
இணைதூம்புனலிலகியநறுங்
குங்குமமுலைக்குவடிழிதர
இங்கொருதனியிக்கோற்றொடி
மனமுருகுபுமயலான்மிக
இனைகின்றனளிந்நீர்மையை
வனநறுமலர்மழைதூய்மணி
இனமுடிபுனையிமையோர்தொழு
மெல்லடியலர்மேன்மங்கைநல்
வல்லியையணைவன்றோட்பணை
ஒருகற்பகமுறைதருமொரு
திருவேங்கடத்திண்கிரியினில்
விறல்கெழுமுனைவேன்மன்னரும்
அறிகிலரவர்க்கார்சொல்குனர்
மடவீர் - - - - - *
இங்கிதற்கென்செய்துமியம்பீர்
ஆங்கவர்பொருணசையகல்குனரல
[ரோ (௬௭)

[இரங்கல். மடக்குவிருத்தம்]

அலர்வாய்த்தேனேபடர்படவே - அலர்வாய்த்தேனேபடர்படவே - *
அகலும்பாணிவளையினமே - அகலும்பாணிவளையினமே - - *
சலமுற்றுவிக்குருகேோ - சலமுற்றுவிக்குருகேோ - - - - - *
சாலக்கொடியாரம்மணலே - சாலக்கொடியாரம்மணலே - - *
சிலைமாறுஞ்சுவடமலையான் - சிலைமாறுஞ்சுவடமலையான் - - *
சீர்த்தண்டுளவன்மாவுரத்தான் - சீர்த்தண்டுளவன்மாவுரத்தான் - *
மலைபூவரிக்கணம்பாறே - மலைபூவரிக்கணம்பாறே - - - - *
மாநச்சுறவேபாலனமே - மாநச்சுறவேபாலனமே - - (சுஅ)

[கலிநிலைச்சந்தவிருத்தம்]

அனமேல்வருமயனுருறையலர்நாபியினெடுமால் - *
வனமேமலர்நறைகால்வடமலைவாழ்களிமயில்காள் - *
புனமேவருமடவாரொடுபுரிவாலொருதமியேன் - *
மனமேகினதவர்போகினவழியேதுணைசெயுமே (சுகூ)

- [சித்து. அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

ஊனையாவுமனத்தாவுமரைக்கொணுதவோங்குபுகழ்வேங்கடவனுபயபாத
மனையாசைச்சித்தரியாம்பலநாகத்தில்வலியவாசியவிரும்பைவருவித்தந் [தக்
கனையாதவிரும்பையெல்லாம்பணங்களென்னக்காண்பித்தோமவ்வரை - [வோகரியதோலும்
அனையாரத்தோலுடுத்தோனிடமுங்கைக்கொளச்சிலையுமாதங்கமாக்கி - [னேமே

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

ஆக்குந்தொழிற்குவிரிஞ்சியைவைத்தழிக்குந்தொழிற்குச்சிவனைவைத்து
காக்குந்தொழிருன்கைக்கொளருட்கடவுள்வடவேங்கடங்காணு - *
நோக்குங்கருதாமனமுமொருநொடிப்போதேனுந்துதியாத - - *
வாக்கும்பணியாத்தலையுமுளமனிதரிருகான்மாடுகளே - - (எக)

[கொச்சகக்கலிப்பா]

மாடாகநிழற்றுசெழுமரனுகத்தவச்சிறிய - *
பூடாகக்குழைத்தநறும்புதலாகவழிப்படுமோர் *
ஓடாகப்பெறுவமெனினுயிர்காணற்கதிபெறலாம்
வீடாகத்திருநெடுமால்வீற்றிருக்கும்வேங்கடத்தே (எஉ)

களி. தாழிசை

வேங்கடக்கிரியிலோங்குசெங்கணெடுமேகம்வீறுகருணுகரன் - - *
விமலமானபதகமலமாயனதிவிருதுபாடிநடிகளியமோம் - - *

நாங்கண்மெய்ச்சுமதுவுண்ணவுண்ணமிகநல்லபுத்திதரும்ல்லதோர் - ✻
நாளுமெங்களமயக்குமோசமணஞானிகாளினிதுகேண்மினோ - ✻
ஏங்குமத்தியினின்மாமுளைத்ததுவுமிக்குமீதுபலவரசெலாம் - - ✻
இருப்பதுங்கருவனக்கொடித்திரளெழுந்துவிண்ணிடைபறப்பதும் ✻
நீங்கலற்றபசுபதிகுளத்திலெரிநிற்குமாறுமொருகாலுளோன் - - ✻
நித்தமேருவலம்வருவிசித்திரமுநிச்சயஞ்சுராருமறிவரோ - - (எங)

[நேரிசைவெண்பா]

அறியுமவர்நம்மடிகளாவார்மனனே - ✻
நறியவனச்சேடகிரிநாதன் - - செறியும்
இசைக்கண்ணன்கத்தாவினங்களிக்கஆதேஷ்
இசைக்கண்ணன்கத்தாவென - - (எச)

[எழுசீர்க்கழிநெடில் ஆசிரியச் சந்தவிருத்தம்]

எனதுவினையிருள்செற்றபரிதியிதுமதிவட்ட - - - ✻
மிதுவெனவில்விடுசக்கிரநிலவேகால் - - - ✻
கனதவளவளைகைக்கொள்பரமனுறைபணிவெற்பர் - ✻
கனகநினையிதயத்தினினையாரோ - - - - ✻
முனநறியமலர்மெத்தைதனின்மருவுபொழுதொற்றை
முகமுமுழுதுமரகத்தின்மறைநீரால் - - - ✻
மனமுருகிநிகரற்றசசிவலயமுகிலுக்குள் - - - ✻
மறைவதெனவவர்சொற்றமொழிதானே - (எரு)

[வஞ்சித்துறை]

மொழிமறைமுடிமேல் - ✻
எழுமுதலதுவே - - ✻
செழுவடமலைவாழ் - - ✻
விழுமியபொருளே - (எசு)

[ஊசல். எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

பொருளலாவிடயத்தைப்பொருளென்றெண்ணிப் - ✻
போவதுமீள்வதுமாயெப்பொழுதுமாடும் - ✻
மருளுலாமனவூசல்சுத்தஞ்செய்து - - - - ✻
மாறுதுவளர்பத்திவடத்தைப்பூட்டி - - - ✻
இருளைநேர்குழனிலப்பெண்ணலர்மேன்மங்கை - ✻
இருவரொடுமேயதன்மேலேறிவீற்றும் - - ✻
அருளினன்மெள்ளவசைந்தாடிரூசல் - - - - ✻
ஆதிவடமலைமாயராடிரூசல் - - - - - (எஎ)

[கட்டளைக்கலித்துறை]

ஊசலையொத்துத்தனத்தாற்றுயல்வருமொண்மருங்குற் - *
கோசலைதன்சுதன்வேங்கடவாணன்குணகணமாம் - *
வீசலைவெள்ளத்தழுந்தறிவாளர்க்குமீண்டுமுண்டோ - *
காசலைநேர்குழற்பெண்ணிலத்தாசைக்கனவழுக்கே - (௭௮)

[பிச்சி. கட்டளைநிலைக்கலிப்பா]

அழுக்கிலாநுதல்வெண்பிறையாகநீறணிந்ததன்றியிரசதவெற்புரு - *
கொழுக்குவான்முலைசொள்ளவெண்ணீற்றைநீகொட்டினான்கொடியி
[டைதாங்குமோ
பழுத்தகாவித்துகிலுடுத்தோர்கதைபற்றிநிற்பதென்பற்பலமாதவர் - *
ஒழுக்கமாற்றுதற்கோவேங்கடேசனாரொலிவிழாக்கண்டுளங்களிபிச்சியே
(௭௯)

கலிநிலைத்துறை

பிச்சிநறுங்குழலாயிதுவென்மதிபேசாய்பார் - *
மெய்ச்சுமரங்கமுகந்துதுயின்றுளிமிகுமாடக் *
கச்சியிருந்துரகாசலநின்றருள்கனிவாயெம் - *
அச்சுதனொம்மனமேவியுமாசையையறியாரோ (௮௰)

கலிநிலைத்துறை

ஆர்படைத்தகணையையலைத்தகன்றமதர்நெடுங்கண்மலரணங்கின்மார்பர்
ஏர்படைத்தவடமலையிலெமையிருத்திப்போனவர்தம்மெதிர்ப்படாதோ
சீர்படைத்தமடப்பேடைக்கிரையருத்துங்கருத்துடைத்தாய்ச்சேண்மீன்
[கௌவு
கூர்படைத்தவாயுடைத்தாய்விரைந்துவருங்கருங்கால்வெண்குருகுதா
[னே (௮௧)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

குருகைவளம்பதிமாறனார்கொழிதமிழாரமுதுண்ணாநின் - - *
இருகுழையஞ்செவிகோதுசேரொணகவிநஞ்சமுமுண்ணாமால் - *
பெருகருள்வேங்கடநாயகாபேதையசோதைமணைக்கணாவன் - *
ஒருகனிவாய்நறுவெண்ணெயுமுண்டதுமண்ணையுமுண்டதே (௮௨)

[எண்சீர்க்கழிநெடில் ஆசிரிய மடக்கு விருத்தம்]

உண்டுமண்ணெலாமுமிழுமாயனாரோங்குவேங்கடத்துறையுமாயனார் - *
தொண்டைநாடுவாழஞ்சொல்வஞ்சியார்தொழுமெனைத்தினைத்துணையும்
[வஞ்சியார்
கொண்டல்சீறுவார்குழலுமோங்கலேகோவைதாழிளங்குயமுமோங்க
அண்டுமைக்கணீராவிக்காவியேயவர்விருப்பினேனாவிக்காவியே [லே
(௮௩)

தாழிசை

காவிவண்ணர்வடமலையகத்திலுறைகண்ணர்செஞ்சரணகஞ்சமும் - *
கனகவாடைநிகழிடையுமேடுவிரிகமலநாறுதிருநாபியும் - - *
பூவிலன்னமமர்மார்புநேமிவளைபொலிகையங்கபயவரதவண் - - *
பொற்கையானசதபத்திரநாளுநறைபொழிதுழாய்கமழுவாகுவும் - *
மேவுபன்மணியினணிதிலங்குதிருமிடறுமின்னகையின்வதனமும் - *
விலையிலாதநலபவளவாயுமெழின்மிக்கநாசியுமொளிக்குழாம் - *
ஏவுபொன்மகரகுண்டலச்செவியுமிணைவிழிக்கருணைவாரியும் - - *
இலகுநன்னுதலுமௌலியுந்தமியனிதயமூண்டுகளிகொண்டதே (௮௪

கட்டளைக்கலித்துறை

களிகொண்டெமக்கருள்வேங்கடவாவெதிகட்கரசன் - *
அளிகொண்டளித்தவளையாழிவாங்கினையற்புதமா - - *
நளிகொண்டபூங்குழற்பெண்ணரசாயினநங்கைசெங்கை - *
ஒளிகொண்டவால்வளையாழிகைக்கொள்வதுசிதமன்றே (௮௫)

[எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

உசிதமறைக்குலம்போற்றும்வேங்கடத்தெம்பெருமான் - *
உருக்கனகமதிற்கிழைத்திருப்பதியில்ரத்தின - - - - *
கசிதமணிமலிதெருவிலடகுவிற்குமடவாய் - - - - - *
காரையும்வள்ளையுந்தீண்டிற்கண்செவப்பாய்வெம்மைப் - *
பசிதவிர்க்குமுன்னைவிரும்பினனெனிலொன்றேனும் - - *
பகரமதியாய்வேளைபார்த்தளிக்கமாட்டாய் - - - - *
சசிமருவுபதிவரினுமாரைநீகாட்டச் - - - - - - - *
சம்மதியாயுனக்கிந்ததன்மையடாதனவே - - - (௮௬)

[வஞ்சிவிருத்தம்]

வேதனைத்தருவிமலனென் *
நாதன்வேங்கடநாயகன் - *
பாதமல்லதுபற்றுமே - *
ஏதமற்றவரிதயமே - (௮௭)

[நேரிசைவெண்பா]

மேதக்கநின்பெருமைவேலைக்கரைகாணக் - *
கோதற்றநான்முகற்குங்கூடுமே - ஓதரும்பொன்
மண்டபந்தாமேவுவடமலையாய்நீயாடக் - - *
கொண்டபந்தாமண்டக்குழாம் - - (௮௮)

[எழுசீர்க்கழிநெடில் ஆசிரிய மடக்குவிருத்தம்]

அண்டனண்டத்துக்கதிபதியாமாழியனாழியைவலத்திற் - - - *
கொண்டவன்கொண்டனிறத்தினனிறத்திற்கோதையான்கோதைநீங்குத்தி *
முண்டகன்முண்டக்கண்ணினான்கண்ணனமுத்தன்முத்தருவிவேங்கடவே *
தண்டவான்றண்டாதரிப்பவன்றரிக்குந்தனுவனைத்தனுவெடார்தாழ்வார் *

[எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்] (௮௯)

தாழ்வாருக்குயர்வாழ்வைத்தருமால்வேங்கடவன் - *
சயிலத்தைத்தரிசித்தர்ச்சனைநற்றிச்செயமேல் - *
சூழ்வானோர்சொரிதோயத்துளிநேசித்துதவும் - *
தாபஞ்செஞ்சுடர்பொற்றுந்துமிநாதந்தமைநீ - *
வீழ்வானிற்றுளிபேழ்வாய்மேகத்தின்படலம் - *
மின்னுப்பேரிடியென்பாயுன்னிப்பாரலவால் - *
வாழ்வாலாய்வெருவேலுன்மணவாளன்கொடிமுன் *
வருமாரம்புனல்வீழும்பொருமாரன்கொடியே - (௯௰)

ஆசிரியத்துறை

மாரன்கொடிமுன்னேவந்ததுகாண்மின்னே - - *
சேரன்றொடையென்றற்சிதையாதோநீசெப்பாயால் *
சேரன்றொடையுன்றற்சிதையாதினிமாதே - - *
ஓரஞ்சனவெற்பானுகப்பாயணைவானுனைத்தானே (௯௧)

கட்டளைக்கலித்துறை

உனைத்தானவாரணமன்றழைத்தாங்குள்ளுகந்தழைக்கும் - *
எனைத்தானவாரணமெய்திவந்தாள்கிலையென்மொழிமோ - *
அனைத்தானவாரணமும்போற்றும்வேங்கடத்தற்புதபூ - *
மனைத்தானவாரணக்கண்டத்தின்மாதுறைமார்பத்தனே(௯௨)

[வலைச்சியார். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

பத்தருக்குயிரானவர்வேங்கடப்பரமனார்திருநாட்டில் - *
மைத்தகண்ணிணைமுலைச்சியாரானவருவலைச்சியார்கண்வாளை *
யைத்திருக்கையையன்னவராலையுமங்ஙனேகண்டாற்பூ - *
ஒத்தகைத்தலங்கூப்புவார்கெஞ்சுவாருள்ளமீனசையாரோ(௯௩)

[ாஅ - அடி நேரிசை ஆசிரியப்பா] [வின்

சைதருபொருளைநனிமிகவீட்டத்
சையிருநான்குஞ்செல்லுபுதிரிந்து
ன்னுமந்தீஞ்சொற்பைந்தமிழமுதை
ன்னுயிர்க்கிரங்காமானிடர்தொள்ளைச்
செவிக்கமரொழுக்குஞ்செந்நாப்புல
[வீர்

புவித்தலைநீராம்பொறிக்கிடைதேட
எய்தியபாவமுமின்மையுநீங்கிநீர்
உய்திறந்தமியேனேதுவல்கேண்மின்
தவலரும்வறுமைதலைப்படயானும்
கவலையுற்றுழுபசிகனற்றிடத்தேம்பி

உலகின்மாக்களையும்பிதபாடி
அலைவுறுமெல்லையினுகூழ்பிடர்பிடித்
இந்தலின்வேங்கடவுயர்வரைசூழ்நாட்
டந்திற்சேர்ந்தனனுயிடைநிலமுதிர்
கூரிருட்படலங்கூட்டுணும்பல்கதிர்ச்
சூரியனவிர்வெண்சுடர்கொப்புளிக்கும்
மதிமகன்விட்டில்வருமதிவரலால்
பதின்மர்பாட்டுகேத்தபதுமநாபியனை
அத்திருப்பதியிலயர்விழாவினிற்போய்ப்
பத்திமித்பணிந்துபயன்பெறும்பாக்குக்
குடங்கையினமர்முக்கோலினர்காவிப்
படம்பொதியரையினர்பன்னிருதிருமட்
காப்பின்மேனியர்கடைதுரவின்மணி
மாப்பங்கயமணிவடமசைமார்பினர்
திண்புயத்தேற்றுந்திருப்புற்கூடையர்
வண்பதத்திருவகைமறைபகர்வாக்கினர்
பெருகருளொதிபதிபெயர்பூண்டிலகும்
அரிவாட்படையினரறையுரத்தப்பினர்
சிறுகோலாலடிசேமக்கலத்தினர்
மறுவிலாமுகமேல்வளர்திகழ்மாருதி
முகத்தினர்சதியின்முறைநடிதாளினர்
அகத்தெழுபரிவானடிக்கடிபணியா
வருவிரதத்தினர்வண்கவுளிணையில்
உருவக்குத்தியவொண்ணிறக்கம்பி
பூட்டினர்கையிற்புடைதாளத்தர்
இட்டுமின்னரம்பின்யாழொடுசின்னரி
தண்டையினெளியொடுதமக்ளத்தொனிபோய்

அஞ்சடியபாடுமரிகீர்த்தனத்தர்
தொளைவேய்த்துண்டஞ்சுரிமுகக்குடக்கூன்
வளையூதழகியவாய்ப்பவளத்தினர்
நீற்றைத்தைஇயநெற்றியர்சந்தனச்
சேற்றைத்தடவியசெழுமத்தகத்தினர்
வடியிடுகுங்குமமட்குறிநுதலினர்
அடைவினின்முத்திரையைந்தணிமேனியர்
மறித்தோல்சுற்றுமருங்கினர்புலியின்
பொறித்தோலுடையினர்புரிசடைக்கற்றையர்
சிரத்திற்சுமையர்திரட்டோட்சுமையர்
கரத்திற்சுமையர்கனிவாய்மக்களை
ஏந்துடுபின்வருமில்லினராதரம்
சேர்ந்துடன்வருமாத்திரளினர்தம்முன்
பலகொடிதுயல்வரப்பல்லியமுழங்க
மலிகுழாங்கூடிவருபெருஞ்சீரினர்
ஏறுமேதிநினரிவர்பரிமாவினர்
வீறியதம்மேல்விரிநிழற்கவிகையர்
ஊருஞ்சிவிகையருகைக்குழுவாவினர்
பாரப்படைக்கலம்பற்றுந்தானையர்
ஒழியாதெறும்பூரொழுக்கெனவெண்டிசை
வழிதொறுநடந்துமழையுருமார்ப்ப
தெனக்கோவிந்தவெனுங்குரன்முழங்கக்
கனைக்கடல்வாய்வருகடுவாலியாறெனத்
தன்பிதாவறியச்சதுமுகன்படைத்த
மன்பதையெல்லாம்வரவிடுத்தனனென
வருபிரசைத்திரள்வகைதரிசித்துத்
திருவரர்கிழைத்திருப்பதிதொழுது

பார்த்தவர்வினையும்பாற்றிடுமாழ்வார்
தீர்த்தந்தோய்ந்துசெய்கடன்முடித்து
மோட்டுக்கவயமுலைசொரிதீம்பால்
இட்டஞ்சுரநதிக்கிணையாப்பெருகி
அனுதினஞ்சாரலைவனம்வளர்க்கும்
கனகிரியுரத்காத்கரிமருப்பிடிக்கக்
கொம்பினிருலின்குலங்கிழித்தூற்றும்
வம்புலாந்தாரையைவாளரவெள்ளனச்
சிறைமயிலகொத்தித்திரித்திடலால்
நறையென்றிந்துணநனிவளாகாந்தட்
செங்குலைபாய்பறந்திரளழல்விழ்ந்தென
அங்கெடுத்தோடுமருவிதோய்த்தந்தக்
குழவியின்மேலக்குளிரருவிப்புனல்
பொழிசெம்மணியைப்புண்ணெனவூறும்
மந்தியுங்கானவர்வன்குடிலிற்பாய்ந்
தந்தினவெனவெழுந்துடத்கூன்பலவின்
இருங்கனிச்சுளையாலெறிதலுமாவின்
பெருங்கனியாலெறிபேழ்வாய்க்கடுவனும்
திரிதருகுன்றெனத்தேவருமுனிவரும்
வருநினந்துதிக்கும்வடமலைவணங்கி
அருமைப்பத்தியுமிருமைசத்தின்றிப்
பெருமைகெழீஇயபிரபத்தியுமே
அழியாமுத்தியடைகுனர்க்கிரண்டு
வழியாந்தன்மையின்மாயனைக்காண்பார்க்
கேறுதற்கரியனவெளியனவாய்மிக
வீறுபடித்திரண்மெல்லக்கடந்து
செம்பொன்விமானஞ்சேவித்தணிமதில்
பைம்பொற்கோபுரம்பற்பலமண்டபம்
மணிமயத்தேருர்மறுகுமாளிகையின்
கணமெலாமிருகண்களிப்புறநோக்கி
நிகரில்கோனேரிநீர்படிந்ததற்பின்
புகரில்கோயிலுட்புக்கிருகுழைதோய்
கண்ணெனுங்கமலக்கடவுளைக்கார்மணி
வண்ணனையலர்மேன்மங்கைநாயகனை
ஒப்பிலாமாலையுலகெலாம்புரக்கும்
அப்பனையிறைஞ்சியஞ்சலித்தேத்திப்
புன்சொற்கவிசிலபுகன்றனென்கிளிசொலும்
இன்சொலெனக்கேட்டெனையாட்கொள்ள
உடனேயங்கவனுபயவிபூதி
அடையவுமெனவேயாகப்பெற்றனென்
இன்னணநீயிருமேகிமற்றம்ம
அன்னவனைப்பணிந்தன்பால்வாழ்த்திப்
பாடுமினிகத்துமபரத்தும்
கேடிலாவாழ்வுகிடைக்குமாலினியே (கச)

சவலைவெண்பா

இனிமன்மதாசலமெனெங்கேனும்போய்வில் - *
குனிமன்மதாசலத்தின்கும்பம் - - - - *
தங்கம்புயத்தார்தந்தார்சேடவெற்பருந்தி - *
தங்கம்புயத்தார்தந்தார் - - - - (கரு)

தூது- கலிவிருத்தம்

தாராவையும்போதாவையுந்தான்வேண்டினேனான்வேண்டியே
நீராவிமீனாயவேநினைவுற்றவிங்கெனரற்றுமோ - - *
வாராயெழில்கூராயிழாய்வடவேங்கடத்தடவோங்கல்வாழ் - *
ஏராழியார்நாராயணர்க்குன்னாணையோதென்னாசையே - (கூகூ)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

என்னிடத்திலவேங்கடமாலன்பிலாதாளிதுவெனப்பார்த்தெய்மதனாலெ [ம்பிராநகுத்
தன்னிடத்திலதிகபத்தியுடையமாந்தர்தம்மிடத்திநேசமலாற்றயவிலாத
உன்னிடத்தினேசமுண்டோவுனையாய்தன்பாலுறுமடியாரடியவனாயொ [ருவைகுந்த
மன்னிடத்தில்வைத்தனனுன்னடியரானமக்களைப்பொல்லாநரகில்வைக் [கின்றானே

[கட்டளைக்கலித்துறை]

ஆனாதகீர்த்தித்திருவேங்கடத்துறையச்சுதநீ - - *
தானாதரிகதத்துதித்தேனல்லேனிந்தத்தாரணியில் - *
மேனாளின்மானிடம்பாடியநாச்சுத்தமேவுதற்கு - *
நானாசையாற்றுதிசெய்தேனுன்புண்ணியநாமத்தையே (கூஅ)

நேரிசைவெண்பா

மத்தவரைகாத்தபெருமான்வேங்கடத்துறையார் - *
பித்தரவர்வாயோபிலவாயே - - - - நித்தம்வளர்
கோனாக்கண்ணேங்கிவெளிக்கொண்டலைச்சிறம்மலையைக்
காணாக்கண்சித்திரத்தின்கண் - - - - - (கூகூ)

கட்டளைக்கலித்துறை

கண்ணாயிரம்பெற்றகோனுலகோங்கியகற்பகக்காத் - - *
தண்ணாரும்பூவையும்வேண்டிலம்வேண்டித்தலைக்கணிபூ - *
எண்ணார்க்கிருளன்னவேங்கடத்தான்றொண்டரோவத்றொழில் *
பண்ணாசைத்தொண்டரவர்தொண்டர்தொண்டர்பதமலரோ (ா)

---

[சந்தக்கலிவிருத்தம்]

முத்தமிழ்க்கவிவீரராகவன் - *
பத்தியிற்றுதிபாவின்மாலையை *
நித்தநித்தமுமோதுவாரவர் - *
அத்தனப்பனதாணைவாழ்வரோ *

* முற்றும். *

---

ஐயங்கார்பிரபந்தங்கள் எட்டும் - வடவேங்கடநாராயணசதகமும் -
இத்துடனே அச்சிற்பதிக்கப்பட்டு விற்கப்படுகிறதுகள்.